




விலக்ஷணானந்தர்

# சப்த போதம்

Printed by S. Ganesan
at the Current Thought Press, Triplicane, Madras, S. E.

ஓம்.

தத். ஸத்.



ஓம்.

தத். ஸத்.

## 1. ஞான விநாயகர்

1. மோகமெனுங் கடல்கடந்து முக்தியெனுங்
கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனு மலர்கொண்டு பக்தியெனும் புனலாட்டிப்
பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
விளக்கேற்றிச் சோக நீங்கி
ஆகமெனுங் கோவிலின்கண் அறிவென்னுங்
கணபதிக்கே அன்பு செய்வாம்.

## கல்லால் மஹரிஷி

2. கல்லாலின் புடையமர்ந்து நான்மறை
யாறங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப்பலாய்
எல்லாமா யல்லவுமா யிருந்ததனை
யிருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்து பவத் தொடக்கை வெல்வாம்.

## ஸ்ரீ பிருந்தாவன மஹரிஷி

3. ஐவகைப்பொருளு நான்கு கரணமுங் குணங்கள் மூன்
செய்வினை யிரண்டுமின்றி யாவருந் திகைப்பநின்ற [றுஞ்
பொய்யிருளகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவளராழிச்செங்கட் கண்ணனைக்கருத்துள்வைப்பாம்.

## ஆழ்வார்கள்

4. சீர்மைபெறும் பொய்கையார் திகழ் பூதத்தார்
சென்ன சாகரங் கடத்தும் பேயார் தூய
நீர்மையுயர் திருமழிசைப் பெருமான் மீளா நெறியை
யருண் மாறனெழிற் சேரர்கோமான்
பார்மகிழ் நன் பட்டர்பிரா னெம்மான் றொண்டர்
பதத்துகளார் திருப்பாணரேந்தன் ஞான
மார்கலிய னணி மதுரகவி பூங்கோதை யாமிவர்
தாளென்ஞான்று மகத்துள் வைப்பாம்.

## சங்கர பகவத் பாதர்

5. எங்குமாயாவுமாகி யிசைந்த கேவலமாய்த் தானே
தங்குதன் மாயையாலே தரணியி னுதித்துப்பேத [டுஞ்
அங்கமார்துவைத மெல்லா மறுத்தத் துவிதத்தை நாட்
சங்கரபகவற் பாதன் றுளிணை தலைமேற் கொள்வாம்.

## பாஷ்யகாரர்

6. பொன்னி னிறச்செய்ய துகிலுடையன்
பொலிந்த திருத்தண்டுடையன் புவனத்துள்ள
நன்னெறியோ ரறிய வரிநாரணனே
பரம்பொருளா மென்ன நாலாய்ப்
பன்னுமறைப் பயனுணர்த்தி மால் சமய
முலகமெலாம் பரவச்செய்த
சென்னெல்மலி பெரும்பூதூர் மாமுனிவ
னிணையடிகள் சென்னி வைப்பாம்.

# 2. ஸ்ரீகிருஷ்ண சைதன்ய ஸ்தோத்திரம்

1. உலகமெலாந் தானாகி யன்றியொன்றா யொளிருகின்ற
பேரொளியே உணர்வேதக்
கலையனைத்துந் தேடியின்னுங் காணா மோனக்
கடலே நிர்க்குணக் குன்றே கசிந்துள்ளூறு
நலமலி பேரன்பருக்கே வாய்த்த செல்வ
நவநிதியே கதியே யென்னாட்பே நாயேன்
குலமுழுது மாளாதாட் கொள்ளவந்த
கோவே சைதன்ய வடிவாந்தேவே.

2. சாற்றேனின் றிருப்புகழைச் சாற்றக் கேளேன்
றவளமனத தணிந்து மலர் தாங்கி நித்தம்
போற்றினேனின் றிருவடியைப் போற்றுகின்ற
புண்ணியர்பா லடையேனெப் போதும்போதக்
காற்றேனு முலவாத மாயாமோகக் கடலிடை
வீழ்ந்தெய்த்தேனீ கடைக்கண் பாராய்
கோற்றேனே யன்பருயிர் பருக
வந்த கோவே சைதன்ய வடிவாந்தேவே.

3. கன்னலினற் கட்டியுந் தீம்பாலுந் தேனுங்
கனிரசமுஞ் சேர்நத செழும்பாகோ வானோர்க்
கின்னமுதோ வெனக் கவிதைபுகல் மெய்த்தொண்ட
ரெத்தனையோ பேரிருக்கவியல் பொன்றில்லாக்
கன்னனையமனக் கொடியேன் றன்னையாண்ட
காரணனே பூரணனே கருணைவாழ்வே
கொன் னுனிவேற் கூற்றுவனும் போற்று மெங்கள்
கோவே சைதன்ய வடிவாந்தேவே.

4. அத்தியந்தம் பிரதிபந்த மறுத்த யோகமுன
பிரமரக்குழுக்கலகலாதென்றும்
நித்தியமா யுண்ண வுண்ணத் தெவிட்டாதொன்றாய்
நிறைந்த சுவைத் தெளிதேனே நினைச்சாராது
புத்தி மயக்கால் விடயானந்தமான புன்மல
முண்டுவக்கும் வண்டாம் பொய்யனேனைக்
குத்திரனென்றகற்றி லெவ ராள்வார் கூறாய்
கோவே சைதன்ய வடிவாந்தேவே.

ஓம். தத். ஸத்.

ஓம்.

தத். ஸத்.

# 3. சப்த கீதம்

ஸ்ரீ விலக்ஷணனந்தர் சென்னைமா நகரம் மைலாப்பூருக்குச் சென்றிருந்த தருணம் சில அன்பர்கள் கனி, காய், புஷ்பம், முதலியவைகளோடு தரிசித்து மனத்தை அடக்குவதற்கு மார்க்கங் கேட்டபோது அருளியது.

1. கனியாலும், காயாலும், பூவினாலும்
கருத்தடக்க முடியாது ககனவட்டம்,
இனிதாக மனதடக்கிப் பிராணனேற்றி
ஈராறு காலகற்றி இசைந்து நின்றால்
தனியானதுரிய நிலை தானேதோன்றுந்
தத்துவமு முதிர்ந்துவிடுந் தன்மைகாணும்
பணிவாரார் பவக்கடலுங் கடந்ததாகும்
பதிமயிலை வாழ்சிவமே பண்புளோனே.

அஷ்டாங்க யோகத்தைப்பற்றி வினவியபோது அருளியது

2. அஷ்டாங்க யோகநிலை ஆதாரமாறுடனே
அனுபவமா யவைகாட்டி யறுபத் தொன்றும்
தொட்டாலும் தோன்றாத துரியவாழ்வே
தூநிறத்து மாமணியே வேதமெல்லாம்
எட்டாது கதறுகின்ற பெரும்பொருளே
என்னிதயத்தூடமர்ந்து இசைந்து நின்று
மட்டார்ந்த மயிலையில் வாழ்சிவமே நின்னை
மாமனத்து ளறியாதார் மலடராமே.

இளவரசர் சென்னைக்கு வந்திருந்தபோது 'கருணனந்தர் என்ற சன்னியாசி இளவரசரின் வரவேற்புக்கு அழைத்தபோது அருளியது.

3. உலகாளு மன்னவரை மதிக்கமாட்டோம் ஒண்டொடி.
யார் மாயையிலே வுழல மாட்டோம்
பலகலைகள் கற்றவரைப் பார்க்கமாட்டோம்
பண்டிதரைப் பொருளாக எண்ணமாட்டோம்
மலமொழிந்து மனமொழிந்து மதியுமாகி
மன்றுணடம்பிடுமரசை மண்டிநின்று
தலமமர்ந்த வடியார்க்கே அடிமையாவோம்
தண்மயிலை வாழ்சிவமே தகையுளோனே.

ஈஸ்வரனைக் காட்டிலும் அடியார் எவ்வாறு உயர்வு என்றதற்கு அருளியது.

4. புண்ணியமே யாயிலங்கும் புரணஜோதி புவனமிசை
வழிந்தோடிப் போக்கற்றுகி
மண்ணினகை யடியார்க ணெஞ்சினுள்ளே
மட்டடங்கி நின்றுவிடக் கண்டவீசன்
கண்ணொளியாய் மனவொளியாய்க் கதியுமாகிக்
கலந்திருந்து அனுபவித்து அதனைக்காட்ட
விண்ணொளியா மயிலையில் வாழிலிங்கரூப
வித்தகமே வேதாந்த விமலவாழ்வே.

ஜாதிபேதம் உண்டோ என்று கேட்டபோது அருளியது.

5. சாதிகுலம் நலமிவைக ளுடகில்லோஞ்
சகத்துறவு பூண்ட நாளன்று தொட்டே
வீதிவழி விடங்கன் வருமென்று சொற்றார்
விளையாட்டாய்த் தரிசித்தேன் வினையதாச்சு
மாதிளொரு பாகத்தா னென்னையாண்டு
மதியமுதமீந்த நாளன்றிருந்தே
பாதிமதி கொண்டவனே யில்லையில்லை
பண்பாடு மயிலை யுறு மீசனுரே.

எவ்வாறு உதித்த செய்யுள்கள் இயற்கை ஆனந்தத்தை விளக்குமென்றபோது அருளியது.

அதுவே கனிந்து ஆங்கிருந்து அதுவே நழுவி அதுவிழுந்து,
அதுவே கவியாய் நாற்சீராய் அதுவே யமைந்த தென்றுக்கால்
முதுமா மறைக்கு முதல்வோனு முகுந்தனரனு மிந்திரனும்,
புதிதாமென்ன வதிசயிப்பார் புத்தகத்தை கற்றுரே.

ஸ்வாமிகள் ஜனித்தது எந்தநாடு என்று கேட்டபோது அருளியது.

7. ஒருவரு மறியா நாட்டில் ஒருவரும் போகாநாட்டில்
இருவர்க ளுலவா நாட்டில் இன்பங்களிசையா நாட்டில்
வருவதுமிலாத நாட்டில் வானவர் செல்லா நாட்டில்
திருவருளிலகு நாட்டில் தெய்வமே பிறந்திட்டேனே.

இப்படிக்கு,

**அன்பர்கள்**

ருஷஉ அ. சுய. ய. க. வெள்ளி மாலை உரு. நாழிகை

ஓம்.

தத். ஸத்.

# விலக்ஷணாநந்தர்

## 4. இந்தியா

1. சமரஸ மானதடி எங்கள் இந்தியா
சாற்றுவதைக் கேளுங்கடி எங்கள் இந்தியா
2. அமரர் திலகமடி எங்கள் இந்தியா
அந்தரங்கமானதடி எங்கள் இந்தியா
3. வடக்கே ஹிமயகிரி எங்கள் இந்தியா
வாமனவ தரித்த தெங்கள் இந்தியா
4. தெற்கே குமரியடி எங்கள் இந்தியா
தீர்த்தங்களுள்ளதடி எங்கள் இந்தியா
5. வடமொழியுந் தென்மொழியு எங்கள் இந்தியா
வாயாரச் சொல்லுமடி எங்கள் இந்தியா
6. வேதாந்த தேசமடி எங்கள் இந்தியா
விஸ்தார பூமியடி எங்கள் இந்தியா
7. தூங்கிவிழித்ததடி எங்கள் இந்தியா
துறத்தியடிக்குமடி எங்கள் இந்தியா
8. சீதை பிறந்ததடி எங்கள் இந்தியா
ஸ்ரீராம ராண்டதடி எங்கள் இந்தியா
9. பதிவிரதைக் கூட்டமடி எங்கள் இந்தியா
பர்த்தாவே தெய்வமடி எங்கள் இந்தியா
10. பாண்டியனு ராண்டதடி எங்கள் இந்தியா
பற்றைத்துறந்ததடி எங்கள் இந்தியா
11. அதிகஜனக் கூட்டமடி எங்கள் இந்தியா
ஐந்திலொரு பாகமடி எங்கள் இந்தியா
12. ஜடகோபர் சார்ந்ததடி எங்கள் இந்தியா
சங்கரர் பிறந்ததடி எங்கள் இந்தியா
13. பயமாதியற்றதடி எங்கள் இந்தியா
பாரதர்க்குச் சொந்தமடி எங்கள் இந்தியா



14. ஆழ்வார் பிறந்ததடி — எங்கள் இந்தியா
அவதார தேசமடி — எங்கள் இந்தியா
15. சாந்திபெறச் செய்வதடி — எங்கள் இந்தியா
சைதன்யர் வாசமடி — எங்கள் இந்தியா
16. ஜோதிமுடி கண்டதடி — எங்கள் இந்தியா
சுகதேவர் போதமடி — எங்கள் இந்தியா
17. புத்தரவ தாரமடி — எங்கள் இந்தியா
பூரணத்தைக் கண்டதடி — எங்கள் இந்தியா
18. பகவானை நம்பிவந்த — தெங்கள் இந்தியா
பாசமதை யோட்டிவிடு — மெங்கள் இந்தியா
19. திங்கள் கங்கை கொண்டதடி — எங்கள் இந்தியா
தித்திரி யினுண்மையடி — எங்கள் இந்தியா
20. மேல் மினுக்கை விட்டதடி — எங்கள் இந்தியா
மெய்கண்ட தேசமடி — எங்கள் இந்தியா
21. தூங்காமல் தூங்குமடி — எங்கள் இந்தியா
துரியநிலை போதமடி — எங்கள் இந்தியா
22. ஆலிலையிற் றூங்கியது — மெங்கள் இந்தியா
அரியதுயி லாயமர்ந்தது — மெங்கள் இந்தியா
23. அன்னியர்கள் குடிபுகுந்த — தெங்கள் இந்தியா
அவரைவிட வெண்ணுகின்ற — தெங்கள் இந்தியா
24. எந்தவகை அரசர்களும் — எங்கள் இந்தியா
எடுத்தெடுத்து மாளாதடி — எங்கள் இந்தியா
25. வாழி யெங்கள் தேசமடி — எங்கள் இந்தியா
வாழி அடியார்களடி — எங்கள் இந்தியா

ஓம். தத். ஸத்.

அன்னிய ருடையுடுத்தி அனைவரும் பாவியாகிப்
பன்னிய வேழையாகிப் பாரத நாட்டில் நின்றோம்
இன்னமு மறந்திடரோ யீரோப்பி னுடைதன்னைத்
தன்னிய மாக்கவல்ல தத்துவங் கதரே யம்மா.

---

ஓம்.

தத். ஸத்.

# விலக்ஷணாநந்தர்

## 5. பூரண நூல்

1. எங்கும் நிறைந்த நூல் எங்கள் நூலே
ஏகாந்தமான நூல் எங்கள் நூலே
2. பங்கப்படுத்திவிடு மெங்கள் நூலே
பார்ப்பதற்கு எட்டாதது எங்கள் நூலே
3. ஆதாரமற்றவிடம் எங்கள் நூலே
அத்தியுரி போர்த்ததுவு மெங்கள் நூலே
4. மார்பிற்றரிப்பதிலை எங்கள் நூலே
மனதிற் றரிப்பதுவா மெங்கள் நூலே
5. இச்சையற நின்றதடி எங்கள் நூலே
எல்லாங்கடந்ததடி எங்கள் நூலே
6. கற்றவருங் காணாதது எங்கள் நூலே
கண்டவரைக் கண்டதடி எங்கள் நூலே
7. அஷ்ட குணங்களடி எங்கள் நூலே
அத்வைத நீதியடி எங்கள் நூலே
8. சாதி கடந்த இடம் எங்கள் நூலே
சமயங் கடந்த இடம் எங்கள் நூலே
9. கால்மாறி யாடியது மெங்கள் நூலே
காரிழையாள் பாகமடி எங்கள் நூலே
10. சங்கு செங்கை கொண்டதடி எங்கள் நூலே
சத்துவமாய் நின்றதடி எங்கள் நூலே

11. எட்டெழுத்து மில்லைபில்லை எங்கள் நாலே
ஏட்டாலறிவதில்லை எங்கள் நாலே
12. கோயில் குளங்களில்லை எங்கள் நாலே
குன்றாக நிற்பதடி எங்கள் நாலே
13. சாங்கியர்கள் கண்டதல எங்கள் நாலே
சாராத சாந்தமடி எங்கள் நாலே
14. புத்தமத மில்லையடி எங்கள் நாலே
பூரணத்தினுள்ளடியோ எங்கள் நாலே
15. யோகமிதமில்லையடி எங்கள் நாலே
யோகங் கடந்தமத மெங்கள் நாலே
16. பாரிற் கிடைப்பதில்லை எங்கள் நாலே
பற்றாற்கடுப்பதடி எங்கள் நாலே
17. அனுபவமே உருவமடி எங்கள் நாலே
அதுவுமற்ற போதமடி எங்கள் நாலே
18. மேலேறிக் கண்டதடி எங்கள் நாலே
கண்டதையும் விட்டதடி எங்கள் நாலே
19. மூன்றுமத மில்லையடி எங்கள் நாலே
மும்மூர்த்தி யில்லையடி எங்கள் நாலே
20. வாழி வாழி வாழியடி எங்கள் நாலே
வாழி யென்ற வாழியது மெங்கள் நாலே

**விலக்ஷணானந்தர்.**

ஓம். தத். ஸத்.

ஓம்.

தத். ஸத்.



# 6. ஸ்ரீ கண்ணபிரான் திருத்தாலாட்டு

1. வானவர்கள் போற்றும் வடமதுரை மாயவன் மேற்
றேனமருந்தாலாட்டு செந்தமிழாற் பாடுதற்கு
2. மையாழி வண்ணன் வலமார்பில் வீற்றிருக்குஞ்
செய்யாள் குருகையர்கோன் சேவடிகள் காப்பாமே.
3. தேவாதி தேவருக்காய்த் தேவகியாள் தன் வயிற்றில்
பூமேலவதரித்த புண்ணியரு நீர் தானோ.
4. அம்பனைய கண்ணு எச்சாதை தரும்பிள்ளையென
வம்பவிழுங் கோகுலத்தில் வந்தவரு நீர் தானோ.
5. ஆச்சியர்கள் மத்தா லடிப்பட்டுக் கூத்தாடிப்
பேய்ச்சி முலையுண்ட பெருமானு நீர் தானோ.
6. வெண்ணெய் விழுங்கி விளையாடி யெப்பொழுது
மண்ணையுண்ட செம்பவள மாமாய னீர்தானோ.
7. வேலை யொழிந்தப்பால் வேதாந்தப் பாற்கடலுள்
காலியுடன் பின்சென்று கன்றுதனை மேய்த்தவனோ.
8. எட்டா மறைப்பொருளோ ஏகாந்தமாம் வடிவோ
அட்டாக்கர நிலையா யமர்ந்தவனு நீர்தானோ.
9. வெட்டவெளி ஞானநிலை வேண்டிவந்த நாரதற்கு
இட்டமுடனருள் செய்த எம்பெருமா னீர்தானோ.
10. எங்கள்குறை தீர்க்கவந்து இவ்வுலகி லவதரித்து
மங்களமாய் நின்றருளு மாதவனு நீர்தானோ.
11. சஞ்சலமா மனதடங்கச் சங்கற்பந் தானழிய
அஞ்சுவித வழியருளு மாரியனே கண்வளராய்.

12. நான்மறைக்கு நாயகனே நாதாந்தப் பேரொளியே[ராய்.
ஆன்முகத்தைக் கர்த்தருளு மியாதவனே கண்வளா
13. சநாதனமா மெங்கள்மதஞ் சதுர்யுகத்துஞ் சாயாது
அநாதியதாயருள் செய்த ஆண்டவனே கண்வளராய்.
14. பற்றொழித்த மஹரிஷிகள் பரவிவரும் பாரதனே
மற்றவர்களறியாத மணிவண்ணா கண்வளராய்.
15. மூலமறை மும்மறையாய் முப்போதம் போதமதாய்
ஆலமமரருட் கண்ணா அகண்டமதிற் கண்ணுறங்காய்.
16. பஞ்சவர்க்குத் துணையாகிப் பாரதப்போர் தானடத்திக்
கஞ்சனையு முஞ்சவருட் காருத்தா கண்வளராய்.
17. அத்தினமாபுரி யரச னவையிடையே யாகாய
முத்திவிராட்டுருவ மதாய் முளைத்தவனே கண்வளராய்.
18. கனிவில்லாச் சீவர்கட்குக் கதியளித்துச் சனனவினை
தனையொழிக்கு மெண்ணமுடன் தயாநிதியே நீயுறங்காய்.
19. பெற்றவட்கும் வளர்த்தவர்கட்கும் பேர்சொல்லும்பேரொ
உற்றவர்க்கு முதிட்டிரற்கு முத்தமனே கண்வளராய்.[ளியே
20. பசுபாச நிலையாகிப் பதிவடிவாய்ப் பற்றுகிக்
கசிவாகுங் கார்வண்ணா கருணையுட னீயுறங்காய்.
21. மனிதனையே மேய்க்கவந்த மாதவனே முன்னாலே
முனிவில்லாப் பசுமேய்த்த முதலவனு நீர்தானே.
22. அடியவர்க துயர்தீர்க்கு மச்சுதனே அற்புதனே
படியளந்த பெருமானே பண்டிதனே கண்வளரீர்.
23. கேசவனே நாரணனே கிருஷ்ணாவோ கண்ணாவோ
வாசவனே வானவனே வண்ணா நீ கண்வளராய்.

இப்படிக்கு

**விலக்ஷணானந்தர்.**

---

ஓம்.

தத். ஸத்.

சீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ராஜாதி ராஜ ஸ்ரீ ராமச்சந்த்ர பரப் பிரஹ்மணே நம :

# 7. ஸ்ரீராமாவதார ப்ரபாவம்

பரப்பிரஹ்ம சங்கல்பத்திலே ஈஸ்வர சிருஷ்டியில் வைவஸ்வத மன்வந்தரத்திலே திரேதா யுகத்திலே நாலாம் பாதத்தில் விளம்பி வருஷம் சித்திரை மாதம் நவமி புனர்பூசம் புதவாரம் மத்தியான காலத்தில் கடக லக்னத்தில் பதினுன்கு நாழிகைக்கு ஸ்ரீ ராமாவதாரம் விஸ்வாவசு வருஷமாகிய ஏழாவது வயதில் உபநயனம் பனிரெண்டாவது வயதாகிய சாதாரண வருஷம் சித்திரை மாதம் சுக்லபக்ஷம் துவாதசியில் விஸ்வாமித்திர மஹரிஷி அழைத்துக்கொண்டு போய் அஸ்திரோபதேசம் தாடகாவதம் எக்ஞ சம்ரக்ஷணம் அஹல்யா சாபவிமோசனம் மிதுலா நகரப்ரவேசம் ஜனக ராஜ தரிசனம் தனுர்ப்பங்கம் சீதா விவாகம் பரசுராம ஜெயம் அயோத்யாப் பிரவேசம் வரை வருஷம் பனிரெண்டு. அயோத்திமா நகரத்தில் சீதாப்பிராட்டி சமேதனுய் யுவராஜாவாக எழுந்தருளியிருந்த வருஷம் பனிரெண்டு அப்பால் இருபத்தைந்தாவது வயது ஆரம்பமாகிய ருத்ரோர்க்காரி வருஷம் சித்திரை மாதம் அமரபக்ஷம் நவமி பகல் இருபத்திரண்டு நாழிகைக்கு வனப்ரவேசம்.

அங்கு பதினுன்கு வருஷம் இருந்ததற்கு விபரம்

சில்லரை மஹரிஷிகளின் ஆஸ்ரமங்களில் வருஷம் பத்து; சுதீக்ஷண மஹரிஷியின் ஆஸ்ரமத்தில் வருஷம் இரண்டு; பஞ்சவடியில் மாதம் பதினுன்கு; இதற்குள் குக சினேகம் சித்திரகூட ப்ரவேசம் ஜாபாலி தர்க்கம் பரத பாதுகா நியமனம் அகஸ்திய சங்கமம் தண்டகாருண்ய அபயஸ்தம் சூர்ப்பநகை நாசிகா சேதனம் கரதூஷண திருசிரஸ் வதம் மாயா மிருக சம்ஹாரம். அதனப்பால் தாது வருஷம் ஆனி மாதம் சுக்லபக்ஷம் அஷ்டமியில் மத்தியான வேளையில் அபிஜித் முகூர்த்தத்தில் சீதா அபஹரணம்; அப்பால் ஆடி மாதம் முடிவதற்குள் ஜடாயு வதம் விராதன் கபந்தன் இவர்களது நிக்ரகம் சரபங்க ஆஸ்ரம ப்ரவேசம் சபரி தரிசனம் சுக்ரீவ சக்யம் வாலிவதம்; அதனப்பால் சுக்ரீவ ராஜ்ய

ப்ரதானம் வரைக்கும் ருஷ்யமூக பர்வத் சிகரத்தில் வாஸம் மாசம் நான்கு. அப்பால் சுக்ரீவனை அழைப்பித்தது சுக்ரீவன் ஆஞ்சனேய அங்கத வானரானை - தை ஒரு மாச வாயிதாவில் சீதா தேவியைத் தேட அனுப்பித்தது மாருதியானவர் ஜாம்பவ அங்கத ப்ரமுகாளோடும் தெக்ஷண திக்கை நாடிக் கெடுத் தப்பிச் சுயம் ப்ரபாப் பிலப்ரவேஸம்; அப்பால் அனுமான் மாசி மாதம் ஏகாதசி சாயங்காலம் விஸ்வரூபங்கொண்டு மகேந்த்ர பர்வத சிகரமேறி லங்காப்ரவேசம் பண்ணி சப்தமந்திரி குமாராள் அசோகவன கிங்கரர் ஜம்புமாலி அக்ஷய குமாரன் முதலானவர்களைச் சம்ஹாரம் பண்ணி லங்காதகனம் செய்துவிட்டு, ராவண சம்பாஷணம் சீதா தரிசனமும் செய்து திருவாழியுந் தந்து சூடாமணியையும் பெற்றுக்கொண்டு திரும்பியும் சாயங்காலம் இக்கரைக்கு வந்து அங்கத ப்ரமுகாதிகளுடன் ஸ்ரீ ராகவன் சன்னிதியில் ஜானகி விருத்தாந்தம் சொல்லிச் சூடாமணியுங் கொடுத்தது இது வரை பதின்மூன்று வருஷம் பதினொரு மாதம் பதினைந்து நாள்.

### இதற்குமேல் விபரம்.

தாது வருஷம் பங்குனி மாதம் பௌர்ணமை மத்தியானத்தில் ஸ்வாமி சைனியத்தோடு பிரயாணம், அன்று சாயங்காலம் சமுத்திரக் கரையிலிறங்கியது. பிரதமை முதல் மூன்று நாள் தர்ப்ப சயனம் திருதிகை முடிவுரை சரி. சதுர்த்தி முதல் ஐந்து நாள் சேதுபந்தனம் அஷ்டமி வரை சரி. அன்று ராத்திரி விபீஷணர் அடைக்கலம் புகுந்தது, நவமியில் தொந்த யுத்த ஆரம்பம் அன்று ராவணன் அபஜெயப்பட்டது, அன்றே கும்பகர்ண வதம் தசமியில் கும்பன் நிகும்பன் அதிகாயன் மஹா பார்சுவன் திரிசிரஸ் இவர்கள் வதம், ஏகாதசியில் இந்திரஜித்து நாகாஸ்திரத்தால் எல்லா வானரானையும் இளைய பெருமானையும் கட்டியது அப்பால் அன்றே கருடாகமனம் தூமராக்ஷச சோணிதாக்ஷச அகம்பன்ன பிரகஸ்தாதிகள் வதம் துவாதசியில் இந்திரஜித்து பிரம்மாஸ்திரத்தால் அறுபத்தேழுகோடி சேனைபதிகளையும் ராமலக்ஷ்மணனையுங் கட்டியது; அப்பால் ஹனுமான் சஞ்சீவி பர்வதம் கொண்டுவந்து பிரம்மாஸ்திர விமோசனம் பண்ணியது அதன் பின் நிகும்பலா ப்ரவேசம் அங்கு

இந்திரஜித்துவதம் திரயோதசியில் மூலபலவதம் இதன் கணக்கு.

எழுபத்தேழு கோடியே எழுபத்தேழு லக்ஷத்து எழுபத்தேழாயிரத்து எழுநூற்று எழுபத்தேழு ரதம்.

அறுபத்தாறு கோடியே அறுபத்தாறு லக்ஷத்து அறுபத்தாறுயிரத்து அறுநூற்று அறுபத்தாறு கஜம்.

எண்பத்தெட்டுக் கோடியே எண்பத்தெட்டு லக்ஷத்து எண்பத்தெண்ணாயிரத்து எண்ணூற்று எண்பத்தெட்டு குதிரை.

தொண்ணூற்றொன்பது கோடியே தொண்ணூற்றொன்பது லக்ஷத்து தொண்ணூற்றொன்பதினாயிரத்து தொளாயிரத்துத் தொணணூற்று ஒன்பது காலாள்.

இவை உதயாதி மூன்றே முக்கால் நாழிகையில் வதம். சதுர்த்தசியில் யுத்தமில்லை. அமாவாசையில் ராவண யுத்தம் மகோதரவதம் அன்று ராத்திரி நாலாவது ஜாமத்தில் ராவணவதம் பிரதமையில் மண்டோதரி பிரலாபம் துதிகையில் விபீஷண பட்டாபிஷேகம் திருகையில் சேனுபகுமானம் சதுர்த்தியில் சீதா சோதனம் தசரத சம்பாஷணம் பஞ்சமியில் புஷ்பகவிமான ஆரோகணம் பரத்வாஜ ஆஸ்ரம ப்ரவேஸம் சஷ்டியில் நந்திக்கிராம ப்ரவேஸம் சடா சோதனம் ஈஸ்வர வருஷம் சித்திரை மாதம் சுக்லபக்ஷம் சப்தமியில்,

## ஸ்ரீ ராம பட்டாபிஷேகம்

வசிஷ்ட வாமதேவ கௌதம வால்மீக விஸ்வாமித்திர அகஸ்திய பாரத்வாஜ கண்ணுவ ஜாபால சதானந்த ஆத்ரேய ஜனகர்தி மஹரிஷிகளின் ஆசீர்வாதம்.

அஷ்டமியில் சுக்ரீவன் முதலான வானரானேயும் விபீஷணன் முதலான ராக்ஷசாளேயும் ஊருக்கு அனுப்பியது.

ஏகாதசியில் ஆஞ்சனேயரைத் தபசுக்குப் போகும்படி உத்தரவு கொடுத்தது.

இப்படிக்கு,

**விலக்ஷணனந்தர்.**

ருதூஉஅக. அ. மி. குருவாரம் காலே ௩௦. நாழிகை.

ஓம். தத். ஸத்.

ஞானி உயர்ந்த ஜாதி. அஞ்ஞானி தாழ்ந்த ஜாதி.

1. கடவுளைக் கண்டு முடிந்தவன் பிராமணன்
2. கடவுளைக் காணத் தீவிர அப்பியாசம் செய்பவன் க்ஷத்திரியன்.
3. கடவுளைக் காணவேண்டிய சாதனங்களைச் சேர்ப்பவன் வைசியன்.
4. கடவுளைக் காணும் ஆரம்பப் படியிலேறியவன் சூத்திரன்.
5. கடவுளைக் காண்பதின் யாதொரு முயற்சியுமின்றி யிருப்பவன் பஞ்சமன்.

## பிரஹ்ம சாக்ஷாத்காரம். ஜனன மரண நிவர்த்தி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பரிசுத்தம் | எங்கே | உதயமோ | அங்கே | பக்தி | உதயம். |
| பக்தி | எங்கே | உதயமோ | அங்கே | அன்பு | உதயம். |
| அன்பு | எங்கே | உதயமோ | அங்கே | சாந்தம் | உதயம். |
| சாந்தம் | எங்கே | உதயமோ | அங்கே | சக்தி | உதயம். |
| சக்தி | எங்கே | உதயமோ | அங்கே | ஞானம் | உதயம். |
| ஞானம் | எங்கே | உதயமோ | அங்கே | கிருபை | உதயம். |
| கிருபை | எங்கே | உதயமோ | அங்கே | கடவுள் | உதயம். |
| கடவுள் | உதயம் | பெற்றவர் | கடவுளே | ஆகிறார். | |

விலக்ஷணானந்தர்.